[18th February 1959

(iii) *Thermal Power Station.*—The detailed project report for the Thermal Power Station at Neyveli submitted by Messrs. Techno-expert, Moscow, late in October 1958 has been accepted by the Neyveli Lignite Corporation (Private), Limited, subject to certain modifications and the contracts for the supply, erection, etc., of plant and machinery are under negotiation.

SRI N. K. PALANISAMI : ஏற்கெனவே சர்க்கார் திட்டமிட்டுள்ளபடி 1960-ம் வருஷத்தில் அங்கே நிலக்கரி எடுக்கப்படும் என்று இருந்தது. அப்படி எடுப்பதற்கும் அந்த நிலக்கரியை விநியோகம் செய்வதற்கும் சர்க்காரிடத்தில் ஏதாவது திட்டம் இருக்கிறதா என்பதை அறிய விரும்புகிறேன.

THE HON. SRI R. VENKATARAMAN : நிலக்கரி உபயோகிப்பதற்கும் விநியோகிப்பதற்கும் திட்டம் ஒன்றும் இல்லை.

SRI A. GOVINDASAMY : ஒரு உற்பத்தி தொழிற்சாலையும் ப்ரிக் வெட்டிங் ப்ளாண்டும், இவையெல்லாம் தனியாருக்கு விட என் யோசிக்கிறார்கள் ? அதை அரசாங்கமே எடுத்து நடத்த என் முன் வரக்கூடாது ?

THE HON. SRI R. VENKATARAMAN : சாதாரணமாக ஒவ்வொரு அங்கத்தினருக்கும் ஒவ்வொரு யோசனை தோன்றும். அப்படிப்பட்ட யோசனைகளில் இதுவும் ஒன்று.

SRI N. K. PALANISAMI : நெய்வேலியில் பல பை ப்ராடெக்ட்ஸ் இருப்பதாகச் சொல்லுகிறார்கள். அப்படி எடுத்து உபயோகப்படுத்துவதற்கு அங்கே பல பொருள்கள் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. சர்க்கார் அவைகளைப்பற்றியெல்லாம் பரிசீலனை செய்ய ஒரு லெபரெட்டரியை அமைக்க ஏதாவது ஏற்பாடு செய்யுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : எந்த ஒரு காரியத்தைச் செய்தாலும் ஒன்று ஒன்றாகத்தான் செய்ய முடியும். இப்பொழுது முதலில் நாம் நிலக்கரியை எடுக்க வேண்டும். நிலக்கரியை எடுத்தவுடன் அடுத்த படியாக அதை உபயோகிக்க தெர்மல் ஸ்டேஷன் வைத்து மின்சாரத்தை உற்பத்தி செய்வதற்கு முயல வேண்டும். அதற்கு அடுத்தபடியாக அதைத் தொடர்ந்து நடத்தக்கூடிய பார்ட்டிலைசர் ப்ளாண்ட் அமைக்க வேண்டும். அப்பொழுது பல உப பொருள்கள் அதாவது பை ப்ராடெக்ட்ஸ் வரும். அவைகள் என்னென்ன என்றெல்லாம் கண்டு பிடித்து அவைகளை எந்த விதங்களில் உபயோகிக்கலாம் என்பதற்குத் திட்டம் வகுக்கப்படும்.

*Manufacture of umbrella ribs*

9-20 a.m. *384 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the Government have examined the possibility of manufacturing "Umbrella ribs" as a small-scale industry; and

(*b*) if so, the results thereof?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) There is scope for the manufacture of umbrella ribs, particularly hollow ribs, in this State. In the draft Second Five-Year Plan of this State, a Scheme for starting a Production Centre as an Industrial Co-operative for the manufacture of Umbrella ribs was included by this Government. But the Working Group of the Planning Commission did not approve the scheme presumably due to the reason that this industry should be left to the private industrialists for development.

18th February 1959]

**Sri K. SATTANATHA KARAYALAR** : யாராவது தனி நபர் இந்தத் தொழிலை ஆரம்பிக்க வேண்டுமென்று உதவி கோரியுள்ளார்களா?

**The Hon. Sri R. VENKATARAMAN** : "லைன் பிராண்ட் அம்ப்ரலா மான்யுபாக்சரிங் கம்பெனி", மதுரை இதை ஆரம்பிப்பதற்கு யோசனை செய்துக்கொண்டிருக்கிறார்கள்.

### *Hurricane Lantern Factory at Palani*

*388. *Q.*—**Sri P. G. MANICKAM** : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) பழனி அரிக்கன் லைட் தொழிற்சாலையில் இதுவரை எத்தனை அரிக்கன் லைட்டுகள் உற்பத்தி செய்யப்பட்டன ?

(ஆ) உற்பத்தி செய்யப்பட்ட அரிக்கன் லைட்டுகள் யார் யார் மூலம் விற்பனை செய்யப்படுகின்றன?

(இ) இரண்டாவது ஐந்தாண்டு திட்டகாலத்திலே எந்தெந்த இடங்களிலே அரிக்கன் லைட்டுகள் உற்பத்தி தொழிற்சாலைகள் நிறுவப்படும் ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : (*a*) The Production-*cum*-Service Centre for the manufacture of Hurricane lanterns at Palni has not yet commenced production.

(*b*) The question does not arise.

(*c*) The Government do not propose to start any other Centre for the manufacture of Hurricane lanterns under the Second Five-Year Plan.

**Sri K. SATTANATHA KARAYALAR** : இந்த அரிகேன் லைட் செய்யும் தொழிற்சாலைக்கு வேண்டிய மெஷின்கள் வந்து விட்டனவா? வரவில்லை என்றால் எப்பொழுது வந்து சேரும்?

**The Hon. Sri R. VENKATARAMAN**: மெஷின்கள் எல்லாம் வந்து விட்டன. இந்த மாதக் கடைசியிலாவது அல்லது அடுத்த மாதத்திலாவது ஆரம்பிக்கப்படும்.

**Sri P. G. MANICKAM** : இந்தத் தொழிற்சாலையில் எத்தனை பேருக்குப் பயிற்சி அளிக்க திட்டம் போடப்பட்டிருக்கிறது?

**The Hon. Sri R. VENKATARAMAN** : இது ட்ரெயினிங் ஸ்கீம். 10 "அப்பரெண்டிஸுக்கு" ட்ரெயினிங் கொடுத்துக் கொண்டிருக்கிறோம். இதில் எவ்வளவு பேருக்கு வேலை கிடைக்கும் என்று சொல்ல முடியாது.

**Sri A. GOVINDASAMY** : இந்தத் தொழிற்சாலை கட்டப்பட்டு யந்திரங்கள் வந்து சேர்ந்தும் வேலை துவங்காததற்குக் காரணம் மின்சாரம் வழங்கப்படாததுதான் என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா?

**The Hon. Sri R. VENKATARAMAN** : அப்படி ஒன்றும் இல்லை. சாதாரணமாக ஒரு மெஷின் வந்து, கட்டிடம் கட்டி அந்த இடத்திலே மெஷினைப் பொருத்தி வேலை ஆரம்பிப்பதற்குத் தாமதமே தவிர மின்சாரம் வழங்கப்படாததால் மட்டும் அது நின்று விடவில்லை.

### *Village chavadies*

* 430. *Q.*—**Sri P. G. MANICKAM** : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கோயமுத்தூர் ஜில்லாவிலே எத்தனை கிராமச் சாவடிகள் (village chavadies) பழுதடைந்த நிலைமையிலிருக்கின்றன ?

**The Hon. Sri V. RAMAIAH** : Twenty nine chavadies are in need of repairs.